இந்தக் கம்பெனியார் மூலம் தயாரிக்கப்படுகிற பிலிம் கோடக் கம்பெனியார் பிலிம்களைப்போல் அவ்வளவு தரம் உள்ளதாக இருக்காது என்ற சர்ச்சை எழுந்திருக்கிறதே. இதைப்பற்றி அமைச்சர் அவர்களின் கருத்து என்ன?

THE HON. SRI R. VENKATARAMAN : அவரவர்கள் அவரவர்களுடைய சரக்கை நல்லது என்று சொல்லுவதுதான் உலக இயல்பு. கோடக் கம்பெனிக்காரர்கள் தங்களுடைய பிலிம் நல்லது என்று சொல்லுவதுதான் வழக்கம். அந்த கோடக் கம்பெனியிடமிருந்து கடன் வாங்குகிறவர்களும் அப்படியேதான் சொல்லுவார்கள். இந்த பிரெஞ்சுக் கம்பெனியார் பிலிம்கள் செய்துகொண்டிருக்கிறார்கள். அவைகளும் நல்ல முறையில் செலவாகிக்கொண்டு வருகின்றன. ஆகவே இந்தமாதிரி வதந்திகளுக்கு இடம் கொடுக்கக்கூடாது.

THE HON. SRI C. SUBRAMANIAM : சமீபத்திலே நான் பிரான்சுக்குச் சென்ற பொழுது, இந்தக் கம்பெனிக்கும் சென்று பார்த்தேன். முன்னேற்றகரமான இயந்திரங்களை வைத்துக் கொண்டு உற்பத்தி செய்யக்கூடிய கம்பெனிகளில் இந்தக் கம்பெனி முக்கியமானது என்று சொன்னார்கள். கோடக் கம்பெனியையும் பார்த்தேன். அவர்களுடைய பிலிமையும் பார்த்திருக்கிறேன். இது இரண்டிற்கும் வித்தியாசம் இல்லை என்பது என்னுடைய கருத்து.

SRI N. MAHALINGAM : ஆரம்பத்தில் கோடக் கம்பெனியார் நமக்கு அவர்களுடைய ஒத்துழைப்பைத் தர தயாராயில்லாமல் இருந்தார்களா? அதற்குப் பின்னர்தான் பிரெஞ்சுக் கம்பெனியுடன் ஏற்பாடு செய்யப்பட்டதா? அதற்குப்பிறகு கோடக் கம்பெனி ஏஜெண்டுகள் இந்த நாட்டில் வியாபாரம் கெட்டுப்போகுமென்று நினைத்து இந்தமாதிரிப் பிரசாரம் செய்வது உண்மையா?

MR. SPEAKER : I think this question has not been put in the manner in which it should be put. It is out of order. I will not allow discussion on a private company in this House.

*Mica*

* 365 *Q.*—SRI N. K. PALANISAMI : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) Whether mica is available in Kottaiyiruppu near Tiruppattur in East Ramanathapuram district; and

(*b*) if so, the steps taken to exploit the same?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) & (*b*) Mica occurs in pegmatite veins in a drinking water Oorani in Kottaiyiruppu and underneath a bridge on the Sivaganga–Tiruppathur Road in small quantities. The size and quality are not up to the usual commercial standards generally marked in India or exported.